உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவம்


| | | |
|---|---|---|
| மலர் 9 | உருத்ரோத்காரி௵ பங்குனிமீ 1924௵ மார்ச்சுமீ | இதழ் 12 |


தேவாரம்.

தந்தையுந் தாயுமாகித் தானவன் ஞானமூர்த்தி
முந்திய தேவர்கூடி முறைமுறை யிருக்குச் சொல்லி
யெந்தைநீ சரணமென்றங் கிமையவர் பாவியேத்தச்
சிந்தையுட் சிவமதானார் திருச்செம்பொன் பள்ளியாரே.

---

## இனிவரும் பத்திரிகை

சைவ சமயிகளுக்குள்ளே சென்ற ஒன்பது வருடமாகப் பல இடையூறுகளையுங் கடந்து தன்னோக்கத்தையே கடைப்பிடித்து நடைபெறுஞ் சைவப்பத்திரிகை இது ஒன்றேயா யிருந்தும், இதில் வரும் விடயங்கள் கல்வி யறிவு மிக்க மிகச்சிலர்க்கே பயன்படுவனவா யிருத்தலின் இதின் சந்தாதாரர்கள் தொகை வரவரக் குறைவதாயிற்று. "சைவ சித்தாந்தத் தேனமுதருந்தினர் சிலரே" என்றார் ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகளும். புராணங்களும் இதிகாசங்களும் குவியல் குவியலா யிருக்க சித்தாந்த ஞானசாத்திரங்கள் கைப்பிடி மாத்திரையா யிருத்தலும் இதனை வலியுறுத்தும். இதனால் யாம் வரவுக்கு மேற் செலவிட்டும் இப்பத்திரிகையை நடத்தி வருகிறோம். இப்பத்திரிகையின் மேன்மையும், இதனால் விளையும் சிவபுண்ணியத்தினையும் உணர்ந்து, சிறிதளவாயினும் பொருளுபகரித்து இதனை நடத்துவிக்கும் சைவாபிமான சீலர் எவரையும் இதுவரையில் காணோம். தேசாபிமானப்பத்திரிகைகளை யாதரிக்கப் பல்லாயிரம் பேர் முன்வருகிறார்கள். சைவாபிமானப் பத்திரிகையை யாதரிக்க ஒரு சைவரையும் காணோம். இக்காலத்தில் ஒவ்வொரு கூட்டத்தாரும் தாம் தாம் அபிவிருத்தி

யடையுமாறு ஆங்காங்கு கூட்டங்கள் கூட்டி பத்திரிகைகளாலும், பாடசாலைகளாலும் பிறவற்றாலும் அபிவிருத்தியடைந்து வருகிறார்கள். பறையர், சக்கிலியர், அம்பட்டர், தோட்டிகள் முதலான தாழ்ந்த வருணத்தவரும் ஒன்றுகூடி மேன்மையடைய முயலுகின்றார்கள். பற்பல சமயத்தவரும் அப்படியே செய்கிறார்கள். ஆனால் சைவசமயிகள் மாத்திரம் இவ்விஷயத்தில் மற்றெல்லாரினும் கடையாயவர்களா யிருக்கின்றார்கள். ஆயினும், நாம் அரும்பெரும் விஷயங்களையே இப்பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளியிட்டு வருவதைச் சுருக்கி, புராண சரித்திரங்களை யதிகமாகவும், சாஸ்திரக் கருத்துக்களைச் சுருக்கமாகவும் இனி இதில் பிரசுரித்துப் பத்திரிகையைக் கைவிடாது நடத்தத் துணிந்துள்ளோம்.

அடுத்த சித்திரைமீ வழக்கப்படி பத்திரிகை வி. பி. தபாலில் வரும். அதை அன்பர்கள் திருப்பி எம்மைப் பின்னும் நஷ்டத்திற்காளாக்காமல் தொகைசெலுத்திப் பெற்றுக்கொள்வதோடு ஒவ்வொருவரும் அன்புகூர்ந்து புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துப் பத்திரிகையை யாதரித் துபகரிக்கப் பிரார்த்திக்கின்றோம்.

பத்திராதிபர்.

---

# செவ்வந்திபுராணம்

## தாயுமான சருக்கம்

### விநாயகர் காப்பு

அருளெனுங் கடன் முகந் தடியர் சிந்தையாம்
பொருள்பெறுநிலஞ்சிவ போக முற்றிட
வரமழை யுதவு செவ் வந்தி யானையின்
திருவடி யிணைமலர் சென்னி சேர்த்துவாம்.

(இதன் பொருள்.) உலகத்திலுள்ள ஆன்மகோடிகளின் மீது பரமசிவம் வைத்துள்ள அருள் என்னும் சமுத்திரத்திலுள்ள நீரைத் தம் துதிக்கையாற்பருகி, திருவருட் சத்தினிபாதத்தால் இருவினையொப்பு, மலபரிபாகம் அடைந்த சிவனடியார்களுடைய இருதயமென்னும் சீர்திருந்திய விளைநிலத்தில் சிவபோகப் பயிர்தழைத்து முதிர்ந்திட வரமென்னும் மழையைப் பெய்யும் வண்ணம் அருட்கொண்டல் போன்று திருசிராமலையில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ செவ்வந்தி விநாயகருடைய உபயபாதமலர்களை எமது சிரசிற் சூட்டிக்கொள்வாம் (எ.று.)





பூர்வம் ஓர்காலத்தில் மதங்கர், கௌசிகர், பராசரர், அனந்தர், காசிபர், உரோமசர், புலத்தியர், புலகர்முதலாகிய மஹாரிஷிகளெல்லோரும் ஒன்றுசேர்ந்து இருக்குங்காலத்து அவ்விருடிகள் கூடியிருந்த ஆச்சிரமத்தின்கண் கௌதம மகாமுனிவர்வர, அவரை எதிர்கொண்டுபசரித்தழைத்து வந்து பீடத்திருத்தி அர்க்கியபாத்திய ஆசமனதிகளளித்து அவ்விருடிகள் விண்ணப்பஞ் செய்கிறார்கள். "சுவாமி! தவசிரேஷ்டரே! தங்கள் வரவு நல்வரவாகுக. தங்கள் பாததூளியால் இவ்வாச்சிரமம் புனிதமாயது. எங்காதாரத்தாங்கள் ஒரு பக்திரசங் கனிந்த திவ்விய சரித்திரத்தைத் திருவாய்மலர்ந்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தனர். அப்போது அந்தத் தபோநிதி சொல்லுகிறார்: "வாரீர் முனிவர்களே! நீங்கள் கோரியபடி சொல்லுகிறேன். சற்று நிதானமாய்க் கேளுங்கள். தென்கயிலாயமென்னும் திருசிராமலையென்று தென்னாட்டிற் சிறப்புள்ள ஓர் ஸ்தலமுண்டு. அவ்விடத்தில் அடியார்களுய்யும் வண்ணம் சிவபெருமானார், மட்டுவார் குழலம்மையுடன் செவ்வந்தீசர் என்னும் நாமதேயத்துடன் எழுந்தருளியிருக்கிறார். அவர் அத்தலத்திற் செய்த லீலாவினோதங்களோ வனந்தம். அவற்றுளொன்றாகிய ஓர் செட்டிப்பெண்ணுக்குத் தாயாய்வந்த லீலையைச் சொல்லுகின்றோம். இதை மிகவும் சாவதானமாய்க் கேளுங்கள்" என்று கௌதம முனிவர் சொல்லத்தொடங்கினர்:—

"கேளீர் முனிவர்களே! இந்நிலவலயத்தில், பாதகண்டத்தில் தொன்று தொட்டுச் சீர்மலிந்ததாய், தமிழ்வேந்தர் மூவருள் சூரியகுல வமிசோத்பவர்களாகிய சோழராசாக்களிற் கரிகாற்சோழன் முதலிய புகழ்பெற்ற மன்னர்கள் தங்கள் செங்கோலை நடாத்துதற்கு முக்கிய இராஜதானியாய்க் காவிரிநதி தீரத்தில் விளங்கியது காவிரிப்பூம்பட்டினம். அதன் வளப்பத்தைக் கூறுதற்கு இரண்டாயிரம் நாவைப் படைத்த ஆதிசேடனாலு முடியாது. நாடு, நகர், காடு, கடல் இவற்றிலிருந்து வரும் பொருள்களான்மிக்கு மற்றைய நகர்களுக்கெல்லாம் பிச்சைகொடுக்குந் தன்மையாயுள்ளது அந்நகரம். அகஸ்திய முனிவர் கைக்குத்தப்பின கடலென வியக்கத்தகுந்த வகழியும், மேக மண்டலத்தை யளாவிய மதிலும், பிரமதேவனின் நான்கு முகங்கள்போன்ற நான்கு வாயில்களும், அந்நான்கு முகங்களினின்று மெழுந்த வேதங்களின் முழக்கம் போன்று எப்போது மிடையறாது அவ்வாயில் கடோறு முழங்கும் வாத்தியங்களும் விரவி, இந்திரன் வச்சிராயுதத்திற்குத் தப்பிப்புக்கு ஒளித்த மலைகள்போன்ற மாடமாளிகைகளும், தேவாலயங்களும், மண்டபங்களும், அன்னசத்திரங்களும், சர்வ கலா

சாலைகளும், சமைக்கப்பெற்றுக் கமலநீல குமுதபுட்பங்கள் நிறைந்த தடம் பொய்கைகட்கருகே திவ்வியபரிமளங்கள் வீசும் பாரிஜாதம், மந்தாரம், மல்லிகை, முல்லை, பாதிரி முதலிய பல விருக்ஷங்கள் சூழப்பெற்ற தந்நகரம். தோள்களை நெருக்கி இடையாற்றுங்கவரியன் வாகிப் பாரத்தைப் பொருந்திய ஸ்தனங்களையுடைய ஸ்திரீகள் தங்கள் மெல்லிய சரீரங்களிற் பூசிய செங்குங்குமச் சாந்தின் பரிமளமும், காமத்தை நிக்கிரகித்த முனிவர்களுடைய மனதையும் மயங்கச் செய்யுங் கூந்தற் பனைமரங்களின் விரிந்தபாளைகளின் பரிமளமும் எங்குங் கந்திக்கச்செய்வ தந்நகரம். அருகடைந்தவர் மனதில் அம்புகள் போற்றைத்து, செங்கழுநீர், கமலம் இவைகளைத் தண்ணீரிற்றவஞ் செய்ய வோட்டிவிட்டு இருண்ட அளகபாரச் சோலையில் விளையாடிக் குமிழும் பூவினின்றும் (நாசியினின்றும்) வள்ளைக்கொடிவரையும் (காதுகள் வரையும்) நீண்டு மை தீட்டப்பட்டிருப்பனவாகிய கண்களோடு கூடிய அழகிய வனிதையர்கள், திருமகளெண்ணிலர் போலாண்டு பொலிவுற்றிருப்பர். மேலு மந்நகரத்திலுள்ள சோலைகள், கரும்புவில்லையுடைய மன்மதனுக்கு எப்போதும் வின்னுணியும் (வண்டுகளும்) வாகனமும் (கிளிகளும்) அளிக்கும். அந்நகரம் தூரத்தில் பார்ப்போர் கண்களைக் கவரும் வளப்பத்துடன் புகழ்வாய்ந்த காவிரிநதி சங்கமமாகும் கடற்றுறை யோரத்தில் அந்நதிக்கு வடகரையில் மிகுந்த இரம்மியத்துடன் வீற்றிருக்கும். சமுத்திரக்கரை யோரங்களில் நெய்தனிலச் சிறுமியர்கள் மணல்களாற் செய்த சிறு வீடுகளைச் சமுத்திரத்தினலைகளழித்திட வதற்கு அந்நகர் பொறுமல் கடலைத் தூற்றுவிடும்படி முத்து ராசிகளைக் கொட்டியதுபோற் றுறைகளெங்கும் முத்துக்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும், சமுத்திரக் கரையோரமாயுள்ள மாடங்களில் வசிக்கும் மாதர்களிற் சிலர் தங்கள் தங்கள் கணவர்களுட னூடல்கொண்டு கழற்றி யெறிந்த முத்துமாலைகள் அச்சமுத்திரத்தில் வீழ்தல், அம்முத்துகள் மேன்மேல் விளையும்பொருட்டு முத்துவிதைகளாய் விதைப்பது போன்றிருக்கும். அந்நகரத்தின் வளப்பம் இம்மட்டோ, பரசிவத்தி னருட்பெற்ற வைசிய குல திலகர்களான இயற்பகை நாயனர், பட்டினத்தடிகள் ஆகிய இம்மகான்களின் பாதங்களாற் புனிதமான தந்நகரமென்றால் இன்னமும் அதன் பெருமை விளம்பல்வேண்டுமோ !

" ஓ முனிவர்களே ! இத்தன்மைவாய்ந்த அத்திரு நகரின்கண், இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என்னும் வைசிய வகுப்பினர் மூவரில் பெருங்குடியர் வமிசத்தைச்சார்ந்த இரத்தினகுத்தனென்றெரு வணிக



னிருந்தான். கிளியையும் கோகிலத்தையும் பழிக்கும் இனிய சொற்களையும் கண்டத்தொனியையு முடையவளான தன்மனைவியுடன் அவன் மிகுமேன்மையுடன் வாழுங்காலத்தில், அத்தம்பதிகள் தங்களுக்கு எல்லாச் செல்வங்க ளிருந்தும், புத்திரச்செல்வ மில்லாக்குறையால், தங்கள்மனோபீஷ்டம் நிறைவேறும்பொருட்டு நெடுங்காலம் சிவபூசை வழுவற நடாத்திவந்தனர். இப்படி இவர்களிருவரும் நடத்திவருகையில் தாங்கள் பூர்வசன்மத்தில் ஒரு ஆண்குழந்தையைப் பெறுந்தவஞ் செய்யாம லிருந்தபோதிலும், பிறந்தகமும் இனிப்புக்ககமும் ஏழேழ் தலைமுறையும் பாவனமாக்கும் ஒரு செல்வியைப் பயந்தனர். அக்குழந்தையும், கிடந்தும், மல்லாந்தும், தவழ்ந்தும், நின்றும், தளர்ந்து நடந்தும், ஓடியும், சிற்றிலிழைத்தும் விளையாடியும், நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகவளர்ந்து சோலைப்பசுங்கிளியின் மொழிபோன்ற தன்மழலைச் சொற்களால் வீடு முழுதும் அழகு நிரப்பியதுடன் பெற்றோர்மனமுங் களிக்கச்செய்தது. 'புத்திராச்சத குணம்புத்ரீ' என்னும் வாய்மையையும் நிலைநிறுத்தியது.

'இங்ஙனம் பிறந்தகுழந்தை பெற்றவர்களினுடையவும், மற்ற தாயார்களினுடையவும், மற்றுமுள்ள பந்துக்களினுடையவும், மார்பகத்தும், தோள்களின்மேலும், முடிகளின்மேலும் விளையாடுமே யல்லது தரையைக் கண்டறியாது. அவ்வருமைப்பெண், பேதை, பெதும்பைப் பருவங்கள் கடந்து, குதலைச் சொற்கள் தெளிந்து ஒரு பொற்கொடி போல் மங்கைப்பருவ மெய்தினள். மயில்போன்ற சாயலும், குயில் போன்றகுரலும், அன்னம்போன்ற நடையும், சொன்னம்போன்ற வொளியும், கரும்புபோன்ற தோள்களும், சுரும்புபோன்றகண்களும், சிங்கம் போன்ற விடையும், திங்கள் போன்ற முகமும், குரும்பை போன்ற ஸ்தனமும், அரும்பைப்போன்ற நகையுமுடையவளாய் பார்ப்போர் கண்ணுமனமுங் கவரத்தக்க வனப்புவாய்ந்து செழுங்கொம்பு போல் வளர, அவ்வனிதா ரத்தினத்தின் சௌந்தரியத்தைக் கண்டதும், 'இவ்வழகினுக்குமுன் நாம் ஏவ்விதத்திலும் நிற்கப்பெறேம் தோற்றேம்' என்று மன்மதனும் கப்பங்கட்ட ஆரம்பித்தான். அம்மாதின் தகப்பனும் தன்பெயரே தன்மகளுக்கீந்தனன். அதாவது அவள்பெயர் இரத்தினவதி. அவளும் நல்ல சுபதினத்தில் ஒரு பொன்னங்கொடி பூத்ததையொப்பப் பக்குவமடைந்தனள். உடனே அனேகந் தாதிமாரோடும், ஒரு சிங்கார உத்தியானவனமும் பூந்தடாகமும் அமைந்த செல்வமாடத்தின்கண் மிகுந்த காவலோடு மவளையவள் தகப்பனிருத்தினன். தனக்குப் புறக்காவலுடன் காணம்,

மடம், பயிர்ப்பு, அச்சம் என்னும் அகக்காவலுடனும் அப்பெண் கொடி ஓரிளம் பெண்மானே, கற்பகப் பசுங்கொழுந்திற் பூத்த வரும்போ, இளம் பவளக்கொடியோ, செழுமைவாய்ந்த சோதி நிலாக்கொழுந்தோ, அல்லது இளங்கரும்போ, என வளர்ந்து வரு நாளில் அவளை இரத்தினகுத்தன், திருச்சிராப்பள்ளித் தலத்தில் வாழும் பெருங்குடி வமிசத்தைச் சார்ந்த சத்திய குணசீல சம்பன்னனை தனகுத்தனென்னும் வைசியனுக்கு நல்ல சுப முகூர்த்தத்தில், அக்கினி சாக்ஷியாக வன்னிவலஞ் சுழித்தெழ, வேதியர்கள் வேத முழங்க, பல்வகை வாத்திய முழங்க, மங்கையர்கள் மங்களகீதம்பாட, தரும தேவதை கூத்தாட மணம்புரிவித்தான்.

'ஓ முனிவர்களே! அக்கலியாணத்திற் குவமை சொல்ல வேண்டுமென்ருல், இருதிறத்துச் சம்பந்திகளும் மிகுந்த செல்வவந்தர்களாகையாலே, தேவேந்திரன் மகளை அளகாபுரி வேந்தனுகிய குபேரன் கலியாணஞ் செய்துகொண்டா லெத்தன்மையா யிருக்குமோ அத்தகமையானதென்று ஒருசிறிது கூறலாம். வேறுவமை யொருசிறிதுங் கூடாது. வதுவைச் சம்பிரமம் முடிந்ததும், தனகுத்தனும் இரத்தினவதியின் கைச் சிறுவிரலைப் பிடித்துக்கொண்டு அக்கினி வலம் வந்து, அவள் காற் பெருவிரலை யெடுத்து அம்மிமீது வைத்து, அருந்ததி காட்டி, சேஷையிட்டு மற்றும் செயக்கடவனவுஞ் செய்து முடிவாயினபின், வேதியர்களுக்கு தக்ஷிணை தாம்பூலமும் எல்லாருக்கும் போசன தாம்பூலாதிகளும் கொடுப்பிக்கப்பட்டது.'

'அன்றிரவு இருவரும் பள்ளியறையுட் புகுந்தனர். பிம்பவிதழும், கும்பமுலையும், பிடிநடையும், துடியிடையும், மலர்க்கரமும் தளிர்ப்பதமுமுடைய இரத்தினவதியும் அவள்காந்தனும், மன்மதனும் ரதியும்போலும், முருகனும் வள்ளியும்போலும், ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டு காமபோகத்தில் மூழ்கினர். இவள் முலைமலையும் அவன் புயமலையும் ஒன்றுடனென்று நெருங்கி யெதிர்த்தன. சங்க வளையல் நெரிந்திட குவளைக் கண்கள் சிவந்திட விருவரும் மரமுங் கொடியும்போலும் தழுவிக்கொண்டு முறைமுறை இலவ வாயிதழ்ப் பருகினர். ஒருவரையொருவர் புல்லுதலினுல் ஒருவர்மே லொருவர் வைத்தவன்பு, மெழுகுபோல் பசும்பதத்தில் உருகிக்கரைந்து இரண்டொற்றுமி யொன்ருயினர். இவ்வாறிருவரும் ஊடலும் கூடலும் கொண்டு மரமும் கொடியும்போலும், புட்பமும் வண்டும்போலும் கலந்து, இரண்டுகபோதங்கள் போலும், இரண்டு கிரவுஞ்சங்கள் போலும் பிரியா மனத்தினராய் வாழும் நாளில், சில நாட்களாய பின்



னர், மருமகன் தன் ஊருக்கு போக வேண்டுமென்று மாமனுருக் கறிவித்தான். மாமன் அதற்கியைந்து பற்பல மணிகள் ஆடையாபரணுதிகள் முதலிய வரிசைகளுடன் மாப்பிள்ளையுடன் பெண்ணையுங் கூட்டிக் கைகூப்பி வழிவிட்டான்.'

'தனகுத்தனும் திரிசிராமலைக்கேகும் பாதையில், தன் காதலிக்கு நிகழ்ந்த வருத்தமும், அவள் தாய் தகப்பன் மார்களைப் பிரிந்ததினுலுண்டான துயரும் தோன்ருவண்ணம் பற்பல வேடிக்கைக் கதைகளையும் விநோதங்களையுந் தெரிவித்துக்கொண்டே சென்று தன் ஊர்போய்ச் சேர்ந்தான். எய்தினதும் இருவரும் மனமிசைந்து இல்லறம் வழுவாமல் அநேக தான தருமங்களை நாடோறும் செய்து வந்தனர். - அன்றியும் அவ்விளங்கொடியும் பிரதி வெள்ளிக்கிழமை தோறும், கணவனேவலினுல் அத்திரிசிராமலையில் அடியவர்களுய்யும் வண்ணம், வேதத்தின் மெய்ப்பொருளாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ செவ்வந்தீசரைத் தரிசனஞ் செய்துகொண்டு வந்தனள்.'

இப்படி யனேகநாட் சென்றன. இரத்தினகுத்தனும் சிவபெருமானடிகளைச் சேர்ந்தான். புகார் நகரத்திலுள்ள அவன் பந்துக்களனைவரும் ஆருத் துயரத்துடன் தனகுத்தனுக்கு ஓலையேவினர். மருமகனும் மகளும் ஓலையைப் பார்த்தவுடனே அளவிலாத் துயரத்திலாழ்ந்தனர். இரத்தினவதியோ தீயில் வீழ்ந்த மயில்போல் அலமருவள். அம்பு பாய்ந்த விளம் பெண்மான்போல் பதைப்பள். தன்கிழட்டுத் தாயை நினைந்து நினைந்து உருகுவள். 'தாயே நீயும் தனித்தாயோ! இனி நீ எவ்வாறிருப்பாய்! உன்னையும் பிரியுங்காலம் எனக்குவந்தாற்போலும். ஆ: தெய்வமே! செவ்வந்தீசா! உன் ஆக்கினையும் இம்மட்டோ' என்பள். ஆயிரந்தாரைகளாகக் கண்ணீர் ஊற்றெழு நீம்புனற்போல் பெருக்குவள். இவள் அழுவதால் ஸ்தனபாரங்கள் முன்னர் தீட்டுக்கழிய கண்ணீரில் மூழ்கின. இவளும் பின்னர் ஜலத்தில் மூழ்கினள். உலையிலுற்ற மெழுகைப்போல் அவள் உள்ளம் உருகவே அவள் உடுத்திய வஸ்திரமும் கண்ணீருகுத்தது. இவ்வாறு வாட்டமுற்ற விளங்கொடியை மணவாளனும், மார்போடணைத்து, 'என் கண்ணே! நீ துயரடையற்க. தெய்வசங்கற்ப மிப்படி யிருந்தால் நாமென்ன செய்யலாம். நாம் சுகமாயிருக்கும்போது நம் தாய்தந்தையர் காலஞ் செல்வது இயற்கையன்ருே! இதற்காக நீ சஞ்சலப்படலாமோ. பயப்படாதே? செவ்வந்தீசரருளிக்கக் குறை யொன்றுண்டோ! அவரே நமக்குத்தந்தை. அவரே நமக்குத்தாய்' என்று பலவிதமாகச் சொல்லி அவள் துயரைமாற்றிக் கைகொடுத்துத் தூக்கித்

தன் கைகளால் அவள் கயல்போன்ற கண்களினின்று தாரைதாரை யாய் முத்துப்போலுதிரும் நீரைத் துடைத்தான். அவளும் நாளடை வில் கொஞ்சம் கொஞ்சமாகத் தந்தை சோகமாற்றினள்!

'பிறகு அம்மாது சிரோமணி சிவாலயத்திற்கு பிரதிசுக்கிரவாரந் தோறும் போய்க்கொண்டும், பகவானுக்குப் பிரீதியான பலவிரதங்களை யனுஷ்டித்தும், வந்த அதிதிகளை யுபசரித்தும், மற்றுமுண்டான நற் குண நற்செய்கைகளைக் குறைவற நடாத்திக்கொண்டும் வருகையில், பாற்கடலில் கவுத்துவமணி தோன்றல்போல் அவள் வயிற்றில் தெய்வா னுக்கிரகத்தால் கருப்பமுண்டாயிற்று. கர்ப்பமடைந்தவன்று முதல் அவள் வீட்டில் சுபசகுனங்களுண்டாயின. சூல் நிறைந்து வரவர அவள் ஸ்தனபாரங்களின்மீதுள்ள அழகிய ரேகைகள் மறைந்தன. குமுதம்போன்ற வாய்விளர்த்தது. தாமரை மொக்கின்மேல் கருவண் டுற்றாற்போல் முலை முகங்கள் கறுத்துவீறின. ஆகாசந்தானோ, மின் னலோ, அல்லது மன்மதனிரதமோ, உண்டோ இல்லையோ என்றிருந்த இடையின் ஐயம் நீங்கியது. தேகத்தில் பசு நரம்போடின. புளித்த தூண்வேண்டினள். இம்மாதிரி கருப்பச் சின்னங்களெல்லாந் தோன் றிப் பத்துத்திங்களும் பூரணமாயது. இச்சுபசமாசாரம் பூம்புகார் நக ரத்திலுள்ள அவள் தாய்க்குத்தெரிந்தது. உடனே தாயாகிய கிழவியும், தன்மகள் செயலறிய வேண்டியும் அவளைப் பார்க்கவேண்டுமென்னும் அவாவினலும், காயம்முதலிய பண்டங்களை வாங்கிக்கொண்டு புறப் பட்டனள். அப்போது கடனீருண்ட மேகங்கள் ஆகாயமெங்கும் மூடிக்கொண்டு மின்னலுமிடியுமாய்க் குமிறிக் கடையுகம்போல் பெரு மழை பொழிந்தன. அதனல், காவிரிநதி யிருகரையும் கொள்ளாமற் பூரணப் பிரவாகமாய் ஓடியது. இவ்வாற்றின் தடையால் தாய் தன் பெண்ணிடம் போகமுடியாமற் போய்விட்டது.

'இங்கு இப்படி கஷ்டத்திலிருக்க, திருச்சிராப்பள்ளியில் இரத் தினவதியோ, பிரசவகாலம் சமீபித்ததினல் இன்னம் தன் தாயார் வர வில்லையே யென்று ஏக்கமுற்றவளாய்ப் பலவாறு பிரலாபிக்கலாயினள். 'பிறந்தகத்தின் வரிசையுடன் தாய்வருமோ' என்று ஒருகால் நினைப் பள். பூளைப்புட்பம் போன்று வெளுத்த கூந்தலுடன் பவளவிதழோடு கூடிய தாதிமார்கள் தோட்களின்மேல் கைபோட்டுக்கொண்டு வெள்ளை வஸ்திரமுடுத்திக் கொண்டு என்தாய் இன்னம் வரக்காணேனே. இன் றைக்கு இத்தேசகாலம் வராமையால் நாளையொருவேளைவருமோ' என்று ஒருகால் தனக்குத்தானே சொல்லிக்கொள்வாள். 'எப்போது என்னருமைத் தாய்வருவள். எப்போது அவளைத் தூரத்திற்கண்ட



தும் எதிர்கொண்டுபோய் இறுகத் தழுவிக்கொள்வேன். நடந்துவர அசக்தமடைந்த அவளுடைய பொற்பாத கமலங்களை யெப்போது பிடிப்பேன். அவள் முகத்திலுள்ள வியர்வையை யெப்போது துடைப் பேன். ஹே! ஜகதீச! செவ்வந்தீசா! என்குடலோ குழப்பமெடுக்கின் றது. என்னுடைய அன்பு முழுதும் நீர் கொள்ளை கொண்டவரல்லரோ? உமதருளைக் காட்டி யென்னைக் காப்பாற்ற வேண்டுவது உம்முடைய கடனல்லவோ! என்தாயோ இன்னம் வரக்காண்கிலன். வழியில் ஏது துயரடைந்தனளோ! என்ன இடையூறு நேர்ந்ததோ! இன்னும்வர வில்லை! என்வயிறுவலிக்கின்றதே! எனக்கு இச்சமயம் இவ்விடத்தில் ஒரு மாமியார் கிழவியுமில்லையே! என்செய்வேன்! ஹே! அனாத ரக்ஷகா! ஆபத்பாந்தவா! ஹே! கிருபாநிதே! பன்றிக்குட்டிக்கு முலையளித்ததாயே! பிட்டுக்கு மண்சுமந்த பெருமா! சர்வபரிபூரணா! நான் வெள்ளிக்கிழமைதோறும் தரிசித்துவந்ததில் ஏதேனும் குற்ற முண்டோ? எதனல் ஒரு சகாயமும் கொண்டுவராம லிருக்கின்றீர்? என்று வெகு மனோ வியாகூலத்துடன் மறுகிக்கொண்டு அவ்விளங் கொடி யிருக்கும் வேளையில், தக்ஷணம் சிறப்புறவிளங்கிய தேவனும், தேவ தேவோத்தமனும், மகாமேருவை வில்லாக வளைத்தவராயும், ஞானப்பூங்கோதை நாயகராயும், சங்கரனென்றும், சிவனென்றும், சதாசிவனென்றும், ஈசானனென்றும், புங்கவன், திரிபுராந்தகன், புரா தனன், புராணன் என்றும், கங்காதரன், நீலகண்டன், நெற்றிக்கண் ணன் என்றும், நம்மை யாட்கொண்ட நாயகனென்றும், உபாதியில்லா நிராமயனென்றும், பூரணன், பரன், பராபரன், கைலாசகிரீசன் என் றும், சர்வலோக காரணனென்றும், மதனரியென்றும், காலகாலனென் றும், யானையுரி போர்த்தவ னென்றும், வேதாந்த விமலனென்றும், வேதப்பிரதிபாத்திய னென்றும், அரிபிரமாதிகளுக்கு மெட்டாதவ ரென்றும், அனேக ஆயிர நாமங்களை யுடையவராய், அனேக லீலா விபூதிகளை யுடையவராய், காளகண்ட சதுர்ப்புஜராய், திரிநேத்திரதா ரியாய், உண்மை யறிவானந்த மயமாய், திரிசிராமலையின் கண்ணெழுந் தருளியிருக்கும் செவ்வந்திநாதர் அப்பெண் கொடி செய்தவத்தின் பயனல் அவள் தாய்போல் ஒரு காருண்ணிய ரூபங்கொண்டு வீதியில் வரலாயினர்.

'கேட்டீர்களோ! முனிவர்களே! அடியார்க் கெளியவனென்றும், பக்த பராதீனனென்றும், எண்குணனென்றும், துதிக்கப்பட்ட பக வானுக்கு இதுவும் ஓர் அரிய செயலோ? அவர் எடுத்த ரூபத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். தம் தலையில் முடித்த இளம்பிறை

போன்று வளைந்த முதுகுடனும், அதை யடுத்த சந்திரிகை நிலவு மிழந்தாற்போன்று வெளுத்த கூந்தலுடனும் அசைய, அருளை நடாத்தும் செங்கோலை யுடையவர் என்பதற்கு அத்தாக்ஷியாய் ஒரு ஊன்றுகோலுடனும், 'இப்பெண் விரதம் நன்றாயிருக்கிறது. வெகு நன்றாயிருக்கிறது!' என்று கொண்டாடுவார் போன்று நடுக்கங்கொண்ட திருமுக மண்டலத்துடனும், தம் சிரசி லணிந்த கங்கையே அனேகம் திவலைரூப மெடுத்தாற்போன்று நெற்றி வியர்வையுடனும், பொற்கொன்றை மலர் பிரகாசிப்பது இப்போது கழுத்தினிடம் அமைந்தாற்போன்று ஒரு பொன் சரடு துலங்கவும், தாம் நடந்ததினால் இளைப்புற்றவர்போல் நெட்டுயிர்ப் பெறிந்துகொண்டு தம் ஊன்றுகோலின் பேரில் தம் உடற்பளுவை ஒடுக்கி, அடிக்கடி வழியில் நிழற்கண்ட விடமெல்லாம் நின்று நின்று தள்ளாடிக்கொண்டு, இரத்தினவதியின் தாய்போல் தெருவில் வந்தனர். காயபண்டங்களும், மருந்தெண்ணெய்க் கலசமும், சுவர்னரத்தின பட்டு பீதாம்பரங்களும், தின்பண்டங்களும் மற்றும் வேண்டியனவும் இரண்டு சேடியர் தலைகள் மேலெடுப்பித்துக்கொண்டு மாயவனுக்கும் அரியவர் அவ்வீதியிலுள்ளாருக்கு எளியவராய் இவ்வாறு வருகையில், தாய் வரவைப் பார்த்துக்கொண்டிருந்த இரத்தினவதி 'ஏதேது இனித் தாய் வரமாட்டாள்' என்று சிந்தாக்கிராந்தையாய் உள்ளேபோனவள் மறுபடியும் இன்னொருதரம் பார்ப்போமென்று வெளியில் வந்ததும் தன் தாயின் வடிவைப் பல தாதியருங்காட்டப் பார்த்தனளென்றால் அவள் களிப்புக் கெல்லையுண்டோ? தூரத்திற் காணும்போதே தன்னை யீன்றவளெனத் துணிந்து தன் வீட்டிற் கருகாமையிற் சமீபிக்கும்போது, எழுந்து எதிர்சென்று அடிவணங்கிடத் தாயும் மிகுந்த அன்புட னிருகரங்களாலும் அவளை யெடுத்துக்கட்டி யணைத்து முத்தமிட்டுப் பல்காலும் மார்பிறுகப்புல்லினள். ஒரு கையாற் றன் குமாரத்தியை யணைத்துக்கொண்டு மற்றொரு கையாற் றலைமயிரைச் சீவி, உச்சிமோந்து, முகத்துடன் முகம்வைத்துச் செங்காந்தள்போன்ற அவள் கரத்தை யெடுத்துத் தன் கண்களி லொற்றிக்கொண்டதுமன்றி அச்சிவமாகிய தாய் தன்மேல் ஒரு பூங்கொடிபோற் சாய்ந்த தன்மகளின் கண்களினின்றும் அன்பின் மேலீட்டினாற் பெருகினநீரைத்துடைத்து இனித் தோன்று வண்ணம், அருள்மொழி மொழிந்து அவளுடன் வீட்டிற்கு வந்து ஓராசனத்திலுட்கார்ந்தாள். பிறகு இரத்தினவதி, தாதியர்கள் கொண்டுவந்த காயபண்டங்களையும் ஆபரணதிகளையும் உவளகஞ்



சேர்ப்பித்து, அச்சேடியர்களுக்கு ஊண் முதலிய வளிப்பித்துத் தன் னிருகண் போன்றதாயுடன் சலனமற்றிருந்தனள்!

'மறுநாள் இரத்தினவதிக்குப் பிரசவ நோயுண்டாயிற்று. அவ் வேதனைப்படுவதைக் கண்ட சிவமாகிய தாய்க்கு ஓரிடத்தில் இருப்புக்கொள்ளவில்லை. இங்கும் அங்கும் தன் கூன் முதுகைக் காட்டிக்கொண்டு பல்லக்குக் கொம்புபோல் அசைந்து அசைந்து தன் பொக்கை வாயை மென்றுகொண்டு தள்ளாட்டத்துடனோடுகிறாள். அக்கம் பக்கத்திலிருக்கும் மூதாட்டிகளையும் மருத்துவச்சிகளையும் ஓடி அழைத்துக்கொண்டு வருகிறாள். 'அம்மா, அழாதே பயப்படாதே சுவாமி காப்பாற்றுவர், அவரை நினை' என்று பெண்ணுக்குத் தைரியம் சொல்லுகிறாள். அடி பாட்டிமார்களே! எனக்கு இச்சமயம் ஒன்றும் தோன்றவில்லை. அநேகம் பேருக்கு வயித்தியமும் செய்வேன். மருத்துவமும் பார்ப்பேன். எல்லாம் செய்வேன். என் ஊரில் கேட்டாலும் எல்லாரும் சொல்வார்கள். என்னருமந்த ஒரு குழந்தை கர்ப்ப வேதனையைப் பார்க்க மனஞ் சகிக்கவில்லை. மனந் தடுமாறுகிறது. இன்னது செய்வது என்று தெரியவில்லை. ஆகையால் நீங்கள் என்ன செய்யச் சொல்லுகிறீர்களோ அதேபிரகாரம் செய்கிறேன். நல்ல பிரகாரம் தாயும் குழந்தையும் வேறானால் அதுபோதும்! என்று ஒருதரம் நாக்குழறத் தலைநடுங்கத் தன் ஊன்றுகோலுடன் தன் முதுகைக் கொஞ்சம் நிமிர்த்துக்கொண்டு பேசுவள். சிறிது நாழிகைப் பின்னர் 'இவளைக் குழந்தைமுதல் வளர்த்து இவளுக்கு நான் பட்டபாடு-ஆனால் நான் பெருமைக்குச் சொல்லவில்லை. கடவுளுக்குத்தான் தெரியும். இப்போது செவ்வந்திநாதர் இக்குழந்தை பங்கிலிருந்து நல்ல வேளையாய்த் தாயையும் குழந்தையையும் வேறுபடுத்தி, இந்த பெற்ற குடலையும் (தன்வயிற்றைக் காட்டி) குளிரச்செய்தால், நானும் என் கைசலிக்க மருத்துவஞ் செய்தால்தான் என் குறைதீரும்' என்று பேசுவள். ஒருதரம் 'எங்கள் செட்டியார் இதெல்லாம் பார்க்கக்கொடுத்து வைக்கவில்லையே' என்று கண்ணீர் தாரை தாரையாய் விடுவள். அப்புறம் இன்னமொருகால், ஆ, என்பாழும் ஞாபகம் இவ்வளவுதான் என்று மார்பைத் தட்டிக் கையை நெரித்துமடக்கி மோவாய்க்கட்டையில் வைத்துக்கொண்டு அங்குள்ள வெல்லாரையும் பார்த்து 'பார்த்தீர்களா! என் ஞாபகம் இவ்வளவுதான். தனக்கு என்றால் ஒன்றும் தோன்றுதென்கிறார்களே. அது என்னிடத்தில் சரியா யிருக்கிறது. பாருங்கள்! நேற்று கோவிலுக்குப் போயிருந்தேனே. செவ்வந்தீசர் ஆலயத்திலிருந்து விபூதி கொண்டுவந்தேனே. அதைக் குழந்தைக்கு

இடமாட்டேனே. அது இந்த முந்தானையில் முடிந்தது முடிந்த பிரகாரம் இருக்கிறது. குழந்தைக்கு இடலாமென்று கொண்டுவந்தேன். அந்த குருக்களும் 'ஞாபகமாக இடு' என்று கொடுத்தார். ஓ! என் ஞாபகம் இவ்வளவுதான்' என்று பலதரமும் சொல்லிக்கொண்டே போய் 'அடி! என் செல்வமே! இரத்தினம்! இந்தா, இந்தா விபூதி' என்று திருநீற்றை யள்ளி அவள் நெற்றியிலும் வயிற்றிலும் மற்று நோயுள்ள விடங்களிலும் 'சுவாமி செவ்வந்தீசா! என் குழந்தைக்கு ஒரு குழந்தை சுகப்பிரசவமாக உண்டாகவேண்டும்' என்று தடவி உள்ளுக்கும் கொடுத்து, மீதியை அவள் முந்தானையில் முடிந்தாள். பிறகு தான் வரும்போது குடுவையில் கொண்டுவந்த மருந்தெண்ணெயை அவள் அவயவத்தில் தடவி இன்னுமுண்டான சிகிச்சைகளை யெல்லாம் நின்றவிடம் நில்லாமல், கண்டோர் திகைக்க வோடி வோடித் தனக்கு மிகுந்த சிரத்தைபோல் செய்து முடித்தாள்!

கேளீர் முனிவர்களே! உண்மைத்தாய் வந்தால் இவ்வளவு சிகிச்சை செய்யமாட்டுவளோ? பகவான் மாயாலீலை இம்மாதிரியுஞ் செய்தன ரென்றால் அப்பெண்ணின் தவப்பயன் என்னென்று சொலத்தகும்? தனக்குப் புருஷவர்க்கங்களில் ஏவல்செய்ய அரிபிரமாதி தேவர்களில்லையா? அல்லது ஸ்திரீ வர்க்கங்களில், தன் தேவியென்ன, இலக்குமியென்ன, சரஸ்வதியென்ன, இன்னும் மற்று முண்டான தேவஸ்திரீகளென்ன, இவர்களில்லையா? வழிவழியாகவடிமைத்தொழில்செய்யும் இவர்களில் ஒருவரைக் கட்டளையிட்டால் இம்மருத்துவ வேலை செய்யமாட்டார்களா? இப்படி யிருக்கத் தானேயிவ்விதம் இரத்தினவதியின் தாய்போல் வந்து தன் உடம்பில் வியர்வை யெழவும், நறைத்த குழல் அடிக்கடி அவிழ்ந்து போகவும், தள்ளாடித் தள்ளாடித் தடமாடி நடமாடிக்கொண்டு, அப்பெண் கால், கை, இடுப்பு அவயவங்களைப் பிடித்துக்கொண்டு இப்படி ஒருவிதமல்ல, நம்மால் சொல்லமுடியாத பலவித உபசாரங்களைச் செய்துகொண்டு இருந்தன ரென்றால் அப்பெண்ணைச் சார்ந்தவர்கள் ஏழேழு தலைமுறையாரும் உயர்ந்தன ரன்றோ? இந்தச் செய்கைகளை யெல்லாம் கண்டு எப்படி பார்வதா தேவியும் கங்காதேவியும் மனஞ்சகிப்பார். அதனால்தான் அவர்கள் கூட வரவில்லைபோலும்,' என்று இவ்வாறு கௌதமர் சொல்லிக்கொண்டு வருகையில், மற்ற முனிவர்கள் கௌதமரைப் பார்த்து, 'தபோ நிதியே! எம்பெருமானுடைய லீலாவினோதத்திலொன்றாகிய இந்த அன்புரசங்கனிந் தொழுகும் சரித்திரத்தைக் கேட்க கேட்க எங்கள் கல்லான மனங்களும் கரைகின்றன. தாங்கள் இன்னம் இக்கதையைச்சொல்லச்சொல்ல அடியேங்களுடைய பசுகரணங்களெல்லாம் தமக்குத் தாமே பதிகரணங்களாகு மென்பதற் கையமில்லை. எங்கள் செவிகளாகிய வண்டுகள் சிவபெருமானுடைய வருங்கதை மதுவையுண்டு களிக்கவும் எங்கள் நெஞ்சமாகிய அம்சபட்சிகள் அப்பகவான் பாதகமலங்களில் தூங்கவுமாக்கினீர். தங்கட்கு கைம்மாறு எம்மாட்டுளதோ? இப்படிக்கொத்த பத்திரசங்கனிந்த சரித்திரத்தைத் தாங்கள் செய்யத் தொடங்கியது எங்கள் நல்வினைப் பயன்தான். அடியேங்கள் முற்றும் ஆனந்த பரிதர்களாகும் வண்ணம் சிவானந்த வாரிதியாகிய திரிசிராமலைநாதன் இதற்குமேல் நடத்திய திருவிளையாட்டையும் திருவாய் மலர்ந்தருள வேண்டும்' என்று கேட்ட முனிவர்களுக்கு அகலிகை நாதர் சொல்லுகிறார்:

'கேளீர் முனிசிரேஷ்டர்களே! உலகத்தில் பக்திமார்க்கமே இக்காலத்திலும் எக்காலத்திலும் இராஜமார்க்கம். அப்பக்திக்குத்தான் தெய்வமும் கட்டுப்பட்டிருக்கிறது. தன் கணவனேவற்படி அக்கற்பினளாகிய கட்டிக் கரும்புபோல்வாள் செவ்வந்திநாதரை உள்ளன்புடன் வழிபட்டு வந்ததினால் உண்டான பலன் இது. 'இந்த பக்தியினால் என்ன இருக்கிறது. நம் விதிப்படியாகிறது! என்றும் இன்னம் பலவிதமாகவும் பிதற்றும் மூடர்களுக்குக்கடவுள் எப்படி அனுக்கிரகிப்பர்? அவ்வறிவீனர்பேரில் இம்மாது போன்ற பக்தசிகாமணிகள் பாததூளி ஒன்று பட்டால், அவர்களுடைய ஊத்தை மிக்க வாய்குளற அடங்கி விடுமன்றோ? அப்போதே புனிதர்களாய் விடுவரன்றோ? கொழுக்கவீறித் திமிர்ந்து தொந்தி பருத்து அண்ணாந்து ஏப்பமிட்டு வாணாளை வீணாளாய்ப் போக்கி சாகுங்காலத்தில் காலபடர் வந்துநிற்குங்கால், நாய் காணிற் கற் காணவாறுபோல் மயங்கித் திகைக்கும் நாஸ்திகப் பேய்களை வற்புறுத்தும் வண்ணம் திருநாவுக்கரசு சுவாமிகளும் திருவங்க மாலையில், 'உற்றார் ருளரோ உயிர்கொண்டு போம் பொழுது—குற்றாலத்துறை கூத்த னல்லானமக் குற்றாருளரோ' என்று அமுத வாக்களித்திருக்கின்றனர். இனி இவ்வாக்கைக் கண்டும் கரையாத நெஞ்சுண்டோ? இதுநிற்க, அம்மாதின் செய்தி என்னென்றால், இவ்விதம் தாய்க்கோலங் கொண்டுவந்த ஈசனார் கரஸ்பரிசம் தன்மீது படவே அம்மடந்தை ஒருவிதமயக்கமும் வருத்தமுமின்றிக் குற்றமற்ற ஓர் ஆண் குழந்தையை நல்ல லக்கினத்தில் ஈன்றனள். அச்சிசு பூகதமானதும் 'பகவான் எங்கே? எங்கே? என்று கூக்குரலிட்டழைப்பதுபோல் வீறிட்டழுதது. அழவும் 'இதோ வந்தேன் இதோ வந்தேன்! என்று செட்டிக்கிழவி ஓடோடியும் வந்து 'அட,

ஆமடா பயலே! ஏது ரொம்பவும் பொல்லாதவனு யிருக்கிறாய். எங்கள் வீட்டுக்குழந்தைகள் ரொம்ப அழுவதில்லை. நீ உன் தகப்பன் கூட்டத்தைக் கொண்டுவந்தாயோ' என்று சொல்லிக் கையிலெடுத்து அதினுடம்பைத் துடைத்து மண்காப்பிட்டுத் தன் கைவிரல்களை யொடுக்கி, கொப்பூழ்க்கொடியறுத்து, தேன்முதலியன அதின் நாக்கிற் றடவி, மற்றும் செய்யவேண்டிய மருத்துவத் தொழில்களை யெல்லாம் குறைவில்லாமல்செய்து, குழந்தைக்கும் தாய்க்கும் ஏழுநாள் வரையில் மருந்து மெண்ணெயுங் கொடுத்து, தாய்க்குப் பத்தியம்போட்டு எட்டா நாள் காப்பரிசியிட்டுக் குழந்தையைத் தொட்டிலி லேற்றி 'எங்க ளிரு குலந் தழைக்கவந்த விளந்தளிரே! கண்வளராய்' என்று சீராட்டித் தாலாட்டினள். தனகுத்தனே குழந்தை பிறந்ததும் ஸ்நான விதிகளை முடித்துக்கொண்டு, வேதியர்களுக்கும் பந்துமித்திரர்களுக்கும் சர்க்கரை தாம்பூலம்வழங்கி உறவினரை யெல்லாம் தைல ஸ்நானம் செய்வித்து விருந்தளித்து சுத்தி புண்ணியவாசனம்செய்து புத்திர மஹோற்சவம் மிகுந்த வைபவத்துடன் பலநாள் வரையில் கொண்டாடினன். இங்ஙனம் ஒரு மாதகாலம் சென்றது. இது வரையிலும் தாயாகவந்த சிவபெருமான் பிரசவவரையிலிருந்துகொண்டே இரத்தினவதியுடன் ஒரு மாதத்தை யொரு நாளாகவேடிக்கையாகக் காலம் போக்கினர். அச்சிசுவையும் முருகக் கடவுளைப்போல வளர்த்து வந்தார்.

'ஹே! முனிவர்களே! கரையான், சிற்றெரும்பு இளமுட்டை, கல்லுக்குள் தேரை, பட்சிகள், மானிடர், தேவர், இந்திரன், அரி, பிரமன் முதலியோரை யெல்லாம் தோன்றாத் துணையாய் வளர்த்தருளும் இறைவனுக்கு இப்போது நேரில் எதிரில் ஒரு குழந்தையை வளர்ப்பதும் புதுமையோ? இன்னமுங்கேளுங்கள். இதுகாறும் மப்பும் மந்தாரமுமாகவிருந்த ஆகாயம் கருந்துகிலை நீக்கி வெள்ளை வஸ்திரத்தால் மேற்கட்டி விரித்தாற்போன்று, பளிங்குபோலத் துலங்கியது.

முருந்து மூரலும், அருந்து மருந்தும், வருந்து மின்சொலும், திருந்து பார்வையும், பொருந்துமேன்மையும் அருந்ததி கற்புமுடைய விரத்தினவதியாகிய தன் பெண்ணைக் காணவேண்டுமென்ற அவாவினால் அவள் தாய் காவிரிப்பூம் பட்டினத்தில் நித்தம் நித்தம் காவிரியாற்றோரம் வந்துவந்து பார்த்தும் ஆற்று நீர் வடியாமையால், என் செய்வேன்? தெய்வமே! என் குழந்தை என்னபாடு படுகின்றனளோ? கர்ப்பவேதனையில் என்னையும் நொந்தாளோ? நான் அக்கரை போக வேண்டுமென்றால் இந்நதி சதி செய்கிறதே.' என்று தன் கண்ணீராற்றையும் பெருக்கினள். இப்படி ஒருமாதம் வரையில் (அதாவது இரத்



தினவதி பிரசவித்து ஒருமாதமாகும் வரையில்) பலவாறாகக் கிலேசித்துக்கொண்டு பிரதிதினமும் நதிக்கும் வீட்டுக்குமா யுழன்றுகொண்டிருந்த இரத்தினவதியின் உண்மைத் தாய்க்கு மனக்கிலேசம் நீங்குமாறு அவ்வொரு திங்களுக்குப் பின்னர் ஆகாசம் துலங்கி நதியிலும் நீர் வடிந்தது. உடனே இரத்தினவதியின் தாய் பெண்ணுக்குரிய சீதன வரிசைகளுடன் அக்கரைபோய் சேர்ந்து அதி சீக்கிரத்தில் திரிசிராமலை யடைந்து பையப் பையக்கோலூன்றிக்கொண்டு திரிசிராப்பள்ளி வணிக வீதியில் இரண்டு தாதிமாருடன் வந்துகொண்டிருந்தனள். தன் மாமி தெருவில் வருவதைத் தனகுத்தன்கண்டு 'இதேது ஆச்சரியமாயிருக்கின்றது! உள்ளேயும் மாமி வெளியிலேயும் மாமி! இது பட்டப்பகல்தானே. இதென்ன விந்தை! இருவரும் ஒருமாதிரியாயிருக்கிறார்கள். என் மாமிக்குத் தங்கை தமக்கையரும் கிடையாதே! பிரமசிருட்டி யிப்படியுமிருக்குமோ? இருவருக்கும் ஓரே நடை, ஓரேமாதிரி கூன் முதுகு; ஓரேமாதிரி நறைத்தகூந்தல். இன்னும் சொல்லப்போனல் ஓரேமாதிரி கரைபோட்ட வெள்ளை வஸ்திரம்; இவர்களில் எவள் அன்னியள்' என்று பிரமித்துக் கொண்டிருக்கையில் அப்பூம்புகார்த்தாயும் இரத்தினவதி கருவுயிர்த்த வறைக்குட் சென்றனள். அப்போது இரத்தினவதிக்குச் சிவமாகிய தாய் அநேகம் விநோதமான கதைகள், அடைப்பத்தொழில் செய்துகொண்டே சொல்லிக்கொண்டிருக்கிறாள். இரத்தினவதி மிகுந்த சிரிப்புடன் கேட்டுக்கொண்டிருக்கிறாள். அச்சமயம் முன்னடியாக வந்திருந்த தாய்க்கு எதிராகப் பின்வந்ததாய் உட்கார்ந்தனள். இதைப் பார்த்ததும் இரத்தினவதி தனக்கு ஒன்றுந் தோன்றாமல் இவர்களில் தன் உண்மைத் தாய் யாரோ என்று திகைப்புற்றுக் கையை நெரித்து முகத்தில் வைத்துக்கொண்டு நின்றாள். இப்படி யிவள் பிரமித்துக்கொண்டிருக்குமளவில் எம்மை யாட்கொண்ட நாதன் தாய் வேடமாறித் திடீரென்று அந்தர்த்தானமாயினர். எல்லாருக்கும், மயிர்க்குச் செறிந்தன. அப்பொழுது காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்திருக்கும் உண்மைத்தாய் தான் இத்தனைநாள் வராததற்குக் காரணங்களை யெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லவும் இதுகாறும் இருந்ததாய் உண்மைத்தாயன்று, பகவானே தாய்க்கோலத்துடன் வந்தார் என்று மனதில் நிச்சயித்துக்கொண்டு எல்லாரும் செவ்வந்திநாதனுடைய அகடிதகடன சாமார்த்தியத்தைப் பற்றிப் பலவாறாகச் சொல்லி நாவாரத்துதித்துக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் எல்லாருடைய கண்களுக்கும் புலப்படும் விதமாய் இரத்தினவதியின்பேரில் வைத்த கிருபாகடாக்ஷத்

தினல் கங்கையணிந்த சடாபாரத்திற் பொலியும் இளஞ்சந்திரன் தனக்கு உறவென்று சொல்லுமாறு சமீபித்த பூர்ண சந்திரன்போல் சந்திரவட்டக்குடை' துலங்க, சந்திர மண்டலத்தைக் கண்டிறங்கின நட்சத்திரக் கூட்டமென வெண்மை நிறம்பொருந்திய புட்பங்கள் சொரிந்திட, முன்னம் பிரமதேவன் பரசிவத்தின் சோதிமுடியைக் காணும்பொருட்டு எடுத்துக்கொண்ட அம்சரூபத்தின் விரிந்த இரு சிறைகள் போன்றிருபக்கமும் சாமரைகள்வீச, சங்கக்குழையணிந்த செவிகளுடன் மருவிய தும்புரு நாரதர்களின் வீணைகானத்தைக்கேட்டு எழுந்து படமெடுத்தாடும் பாம்புகளென ஆலவட்டங்களசையப் பூமிக்கு இருபது விற்கிடையளவில் ஆகாசத்தில் ஒரு பெரிய மந்திர கிரியின்மேல் பச்சைமலையும் பவளமலையுஞ்சேர விளங்கினாற்போல, அழகிய வெள்ளை இடபத்தின்மிசை மட்டுவார் குழலம்மை சமேதராய் ஸ்ரீ செவ்வந்திநாதர் இந்திராதிதேவர்களும் முனிகணங்களும் இறைஞ்சப் பிரசன்னமாய்த் தோன்றினர். தேவதுந்துபி முழங்கியது. வலம்புரி யொலித்தது. திருச்சின்னம், மிருதங்கம் முதலிய பதினெண்வகை வாத்தியங்களும் தாம்தாமென்று ஒலித்தன. வானம் புட்பமாரி பொழிந்தது. முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் முனிகணங்களும், இயக்கர், சித்தர் வித்தியாதரர்களும் தங்கள் கரகமலங்களைச் சிரசில் கூப்பினவராய் ஹர ஹர முழக்கஞ்செய்தனர். பழைமைபொருந்திய வேதாகமங்களும் பிரமதேவனும், இலக்குமிகாந்தனும் முறைமுறை யிருபுடையும் நின்று துதிக்க, மந்தகாச முகத்துடன் மெல்ல மெல்ல இடபத்தை உகைத்துக்கொண்டு, வேத வேள்விசெய்யுமந்தணர்கள் பாசுபதர், மாவிரதர், ஆதிசைவர் முதலானோராகிய அகச்சமயத்தார்க ளறுவரும், பஞ்சாட்சரத்தியானஞ் செய்பவர்களும், தங்கள் தங்கள் உள்ளக்கமலங்களிற் காண்பதுபோல் வெளியிலுங் கண்டு தரிசிக்க நந்திதேவருடன் தமதாலயத்திற் புக்குச்சோதிமயமாய்ச் சிவலிங்கத்துள் அந்தர்த்தானமாயினர்!

'கேட்டீரோ முனிவர்களே! நாயினுங் கடையானவர்களாயிருந்த போதிலும் தம்மை விரும்பி அன்புடன் பத்தி செய்தால், அவர்களிடம் பரமசிவன் ஒரு சிசுவைக்காட்டிலும் மிகுந்த அன்புடன் மனமுவந்து வந்தருளிக் காப்பாற்றுவார் என்பது இதனால் தெற்றென விளங்கிற்றன்றோ? அன்று முதல் அநேக ஆயிர நாமங்களால் துதிக்கப்படும் திரிசிரா மலை நாதனுக்கு "மாதுரு பூதேசுவரர்" அதாவது "தாயுமானவர்" என்று ஒருசிறந்த நாமமும் உலகெங்கும் பிரசித்தியாயது.



'அதன் பின்னர் தனகுத்தனும் அவன் மனைவியும் பந்து மித்திரர்களுடன் நெடுநாள் வரையில் இல்லற வாழ்க்கையை வழுவாமல் நடாத்தி ஸ்ரீ பார்வதி நாதனை யனுதினமும் உள்ளன்புடன் பணிந்து பிரமாதி தேவர்களாலும் நண்ணுதற்கரிய சிவபதமடைந்தனர். தனகுத்தன் சந்ததியும் இப்பூவுலகில் மேன்மேலும் தழைத்துப் பெருகியது. இது முக்காலும் சத்தியம்' என்று கௌதமமுனிவர் மதங்காதி முனிவர்களெல்லாம் கேட்க இந்த திவ்விய சரித்திரத்தைத் திருவாய் மலர்ந்தருளினர்.

இந்தக் கதையைப் படித்தோரும், எழுதினோரும், தங்களிருசெவியிற்கேட்போர்களும் இக்கதையுள்ள நூலைத் தங்கள் கிருகத்தில் வைத்துப் பூஜிப்போர்களும், வாசிப்போர்களுக்கு இருப்பிடம், உண்டி, முதலியதானம் வழங்கினோர்களும் இவ்வுலகத்தின்கண் மிகுந்த செல்வவந்தர்களாயும், நீண்ட ஆயுளுடையவர்களாயும், சுபுத்திரசந்தான விர்த்தியுடையவர்களாயும் மற்றுமுள்ள ஐசுவரிய முடையவர்களாயும் இருப்பதன்றிப் பரலோகத்தில் நித்தியநிரதிசய ஸ்ரீசிவானந்தபதமடைவார்கள். இம்முறை யிருக்குமிடத்தில் அக்கினி பயம், சர்ப்பபயம், அவமிருத்தியுபயம், சோரபயம், பூதபிரேத பிசாச அபஸ்மார சண்டாளக் கிரகங்களின் பயம், இத்தியாதி உத்பாதங்களுண்டாகா. பரமசிவனுடைய கிருபை என்றும் வீற்றிருக்கும்.

ஓம் சுபம்! ஓம் சுபம்!! ஓம் சுபம்!!!

வைய மின்புற மாதர்கற் போங்குக
செய்ய கோலை யரசன் செலுத்துக
பெய்க வானஞ் சிவாலயம் பீடுறச்
சைவ மென்னுஞ் சமையந் தழைகவே.

திருச்சிற்றம்பலம்.

---

## ஜீவனுக் கிரங்காதார் சிவனுக் கிரங்குவரா?

(இந்து சாதனம்)

இவ்வுலகத்திலே இருவினைக் கீடாக நானாபேதமான தேகங்களை எடுத்துழலும் ஆன்ம கோடிகளுக் கிரங்காதவர்கள் சிவபெருமானிடத்திலே ஒருபோதும் அன்புடைய ராகமாட்டார்கள். உலகில் யோனி வாய்ப்பட்டுப் பிறக்கும் "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்." அப்பராபரன் சந்நிதியில் இயங்கும் உயிர்களுடைய "உடல்கள் ஈசன் கோயில்க"ளாகும். அன்றியும் "உள்ளந் திருக்

கோயில் ஊனுடம்பாலயம்'' என்றும் சமய சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆதலின் எவ்வித ஜீவபிராணியும் எடுத்துக்கொண்ட தேகமானது ஆலயமாகுமென்பதும், அதனுள்ளே வசிக்குஞ் ஜீவன் சிவபிரான் சந்நிதியிலுள்ள தென்பதும் பெறப்படுகின்றன. ஆகவே இவ்விதமான எந்த ஆலயத்தையும் முரித்தும் வருத்தியும் வெட்டிக் கொன்றும் தின்றும் சாண்வயிற்றை வளர்ப்பது சிவத்துரோகமாகுமென்பது எங்கள் சமய சாஸ்திரத் துணிபு. இவ்வாறு சிவத்துரோகஞ் செய்பவர்கள் ஜீவர்களாலும் வெறுக்கப்பட்டு, சிவபிரானாலும் புறக்கணிக்கப்படுகின்றார்கள். கொல்லா விரதத்தை மேற்கொண்டொழுகும் ஒருவனை எல்லாவுயிரும் கைகூப்பி வணங்குமென்றும், சிவபிரானைக் "கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணி" யென்றும் மகான்கள் கூறியிருக்கின்றார்கள். ஒவ்வொரு நாளும் ஜீவர்கள் வசிக்கும் ஆலயங்களை அவர்கள் வருந்தித் துடித்துப் பதைக்கக் கொன்று தின்ற ஜீவர்களுக் கிரங்காது காலங்கழித்து, சிவனுக்கிரங்கித் திருமடங் கட்டுவதும் மகா மண்டபங் கட்டுவதும் சிவப்பிரதிட்டை செய்வதும் கோபுரங் கட்டுவதும் இன்னும் வேறுவேறு தருமங்கள் செய்வதுமாகிய இவைகளினால் அடையும் பயன் ஒன்றுமில்லையாகும். உதரத்தை நிரப்ப உயிரைக் கொன்று உலகம் வியக்க உமாபதியைப் பிரதிஷ்டை செய்யும் அறியாமையை வேரோடு களைதல் வேண்டும். இக்காலத்தில் அநேகர் ஆடிச் செவ்வாய் ஆவணி ஞாயிறு புரட்டாதிச் சனி ஐப்பசி வெள்ளி கார்த்திகைச் சோமவாரம் முதலிய விசேடதினங்களிலும் உற்சவ காலங்களிலும் மாத்திரம் ஜீவர்கள் வசிக்குங் கோயில்களை இடித்து வருத்திக் கொன்று தின்றுவிட்டு ஆலயங்களுக்குச் சென்று சுவாமி சந்நிதானத்திலே ஏறக் குவித்த கைகளோடு நின்று "மூவிரு முகங்கள் போற்றி" என்றும் "முகம்பொழி கருணை போற்றி" என்றும் "சேவலும் மயிலும் போற்றி" என்றும் தோத்திரஞ் செய்வதைக் காண்கின்றோம். சேவலை வதைத்துக் கொன்று தின்று கடவுள் சந்நிதானத்திலே நின்று கொண்டு சேவலுக்குத் தோத்திரஞ் செய்வதை உற்று நோக்கினால் அச் சேவல் வயிற்றுக் கிரையாக வந்ததற்காக அதற்குச் செலுத்தப்படும் ஸ்துதி போலல்லவா இருக்கிறது. அச்சேவல் தாய்கீழ்க் குஞ்சாக இருக்கிற காலத்திலே அக்குஞ்சு ஒரு கருடனால் கவரப்படுமாயின் அதனுடைய தாய்க்கோழி அதை மீட்கும் பொருட்டு (அத்தியாவசிய காலத்திலன்றி ஒருபோதும் உபயோகியாத) தனது சிறகுகளை அடித்து விரித்துச் சத்தமிட்டு வெகு கஷ்டத்துடன் அக்கருடனைத் தொடருவதைப்



பார்க்கும்பொழுது அற்பபிராணியாக விருந்தாலும் "குரங்குக்குத் தன் குட்டி பொன் குட்டி" என்றதுபோலத் தன் குஞ்சைக் காப்பாற்றுவதில் எவ்வளவோ சிரத்தையெடுக்கிறது. மானிட தேகமெடுத்தோர் பகுத்தறிவுடையோ ராகவிருந்தும் ஜீவராசிகளிடத்திலே இரக்கமில்லா திருப்பார்களாயின் அவர்களெடுத்த ஜென்மம் கடைச்சென்மமென்றே கருதப்படும். ஜீவர்களில் மானிட தேகமெடுத்தவர்களே மேலானவர்களென்று எண்ணப்படுதலினாலும் அம் "மானிடராக்கை வடிவு சிவலிங்கம்" ஆதலினாலும் மிருகங்கள் நீர் வாழ்வன ஊர்வன பறப்பன முதலிய கீழான தோற்றங்களை எடுத்துப் பிறந்த ஜீவர்களை வருத்துதலும் கொல்லுதலும் உண்பதும் ஒருபோதுங் கூடாவாம். ஜீவர்களிடத்திலே எள்ளளவேனும் இரக்கமில்லாதவர்கள் சிவபிரானிடத்திலே அன்புடையராக மாட்டார்கள்; அப்பரமேஸ்வரனுடைய திருவருட் பிரசாதத்தையும் ஒருபோதும் பெறமாட்டார்கள்.

---

## தமிழ்ப்பாஷையிற் புது நூல்கள்

(இந்து சாதனம்)

தமிழ்ப்பாஷையிலுள்ள புராதன இலக்கிய நூல்களை ஐரோப்பிய பண்டித சிரோமணிகளும் மிகவும் வியந்து நயந்து பாராட்டியிருக்கின்றனர். உலகத்திலுள்ள மற்றெந்தப் பாஷையிலும் தமிழிலுள்ள இலக்கிய நூல்களினும் மேலானவை என்று கூறத்தகும் நூல்களில்லையென்பதே பல பாஷா நூல்களையுங் கற்று அவைகளில் தக்க பாண்டித்தியம் பெற்ற பேரறிஞர் கருத்து. இத்தகைய மகத்துவம் வாய்ந்த அரியபெரிய நூல்கள் நமது சுவபாஷையி லிருப்பது தமிழ்மக்கட் குற்றதோர் பெருஞ் சிலாக்கியமே. ஆயின் அந்நூல்களை மாத்திரங் கற்றுத் தேறுவது எத்துணைப் பெரும் நன்மையாயினும் அஃது அங்ஙனங் கற்போரின் பூரண அறிவுவிருத்திக்குப் போதியதன்று. பழைய தமிழ்நூல்களைச் சிரத்தையோடு கற்பவர் அதில் வல்லவராவரன்றித் தற்காலத்தில் அற்புத விருத்தியடைந்துவரும் பற்பல விஷயங்களைக் குறித்த பொது ஞானத்தில் தக்க விருத்திபெறார். தமிழை மாத்திரங் கற்பவர் அத்தியாவசியகம் அறியவேண்டிய எத்தனையோ பல விஷயங்களில் தமதறிவை விருத்தியாக்கற்கு அவ்விஷயங்கள் மேல் எழுதப்பட்டுள்ளனவாகிய பல்வேறுவகை நூல்களைக் கற்கவேண்டியவராகின்றார். இந்நூல்கள் தமிழிற் பெரும்பாலுமில்லை. இதை நமது

அருமைத் தமிழ்ப் பாஷைக்குற்றதோர் பெருங்குறைவன்றே. இந்தியாவிலும் இலங்கையிலுந் தற்காலம் வழங்கிவரும் மற்றெப்பாஷையினும் தமிழ்ப்பாஷை இலக்கியநூற் சிறப்பிற் பெரிதுஞ் சிரேஷ்டமுடைய தெனினும், காலவிருத்திக்கேற்ப அறிஞராலியற்றப்பட்ட புது நூல்களை யுடையதா யிருப்பதிலுஞ் சிரேஷ்டமாய்க் காணப்படவில்லை. தமிழிலுள்ள பழைய நூல்களை மாத்திரம் அவாவிக் கற்போர் மிகச் சிலரேயாக, அவ்விதங் கற்பவரும் தாம் பெற்ற அறிவைக் குறித்து மமதைகொண்டு தாங் கற்கும் வழியில்லாது தமக்கு மறைபொருளா யிருக்கும் பற்பல நூல்களைப்பற்றி ஞானம் சிறிதுமிலரா யிருக்கின்றனர். இப்பெரும் குறைக்கு அவர்கள் உத்தரவாதிகளல்லர். ஏனெனில், ஆங்கில பாஷையில் எழுதிப் பிரசுரிக்கப்பட்டிருக்கும் அறிவுவிருத்திக்குரிய பெருந்தொகையான நூல்கள் ஆங்கிலங்கல்லாது தமிழை மாத்திரங் கற்பவர்க்கு எவ்வாறு சித்திக்கும்? இக்குறையை நிவர்த்திசெய்ய ஆங்கிலந் தமிழ் என்னு மிருபாஷைகளையும் நன்கு கற்றவரே வல்லவராவர். அவர்கள் தாம்பெற்ற ஆங்கில அறிவின் பயனும் அப்பாஷையி லிருக்கும் அறிவு நூல்களுள் விசேடமானவற்றைத் தமிழிலெழுதி அச்சிட்டுப் பரப்புதல் மிக லோகோபகாரமாயும் தமிழ்ப் பாஷையின் அபிவிருத்திக்குப் பெரிதும் உதவி புரிவதாயு மிருக்குமல்லவா? இது செய்யாது "பசித்தவர் பழங் கணக்குப் பார்த்தாராம்" என்றவாறு நமது சொந்தப் பாஷையிலுள்ள அற்புதமும் உசிதமுமான நூல்களைப்பற்றிப் பெருமை கொள்வது தற்காலத்துக்கேற்ற அறிவு விருத்திக்கு யாது முதவிபுரியாது.

வித்தியா கோட்டியாரின் பிரமாணங்களின்படி தமிழ் வித்தியாசாலைகளில் பொது அறிவுவிருத்திக்குரிய சில பாடங்களைச் செவ்வனே கற்பிப்பதற்குப் புது நூல்கள் தமிழில் அவசியமிருத்தல்வேண்டும். இஃதன்றி கற்றதமிழ்மக்கள் அறிவைவிருத்தி செய்தற்கும் பொழுது போக்கற்கும் நானாவிதமான வாசகபுத்தகங்கள் தேவை. இக்குறைவு மிக அவசியமாய் நிவிர்த்திசெய்யப்படவேண்டியதொன்று. தமிழ் ஆங்கிலமென்னும் இரு பாஷைகளையும் நன்கு கற்றவரே இப்பெருந் தேவையை அநுகூலத்துடன் நிவிர்த்தி செய்தற் கருகராயிருக்கின்றார். நாம் கூறிய வண்ணம் புது நூல்களை யாக்கி அச்சிட்டு வெளியிடுவது அவர்மேற் பொறுத்த பெருங் கடனாகின்றது. இவ்விஷயத்தில் அரசாட்சியாருடைய திரவியோபகாரமும் சன்மானமும் பெரிதும் வேண்டப்படுகின்றன. சுவய பாஷா வித்தியாசாலைகளைத் தம்பொறுப்பிலெடுத்து நடத்த விரும்பி நிற்கு மரசினர் அவ்வனுவசியக முயற்சியை யெண்ணுது தமி



ழையும் பொது அறிவையும் விருத்தி செய்தற்குரியனவாய்ப் பெரிதும் வேண்டப்பட்டு நிற்கும் பல்வகைப் பெருந்தொகை நூற்களுட் சிலவற்றையேனுந் தக்க தமிழறிஞரா லியற்றுவித்து அச்சிற் புகுத்தி வெளியிடும் பெருமுயற்சியைச் சிரத்தையோடு புரிவரேல் அது மிகுந்த அநுகூலமாயும் தகுந்த ஜனோபகாரமாயும் முடியுமென்பதற்குச் சந்தேகமின்று.

ஆங்கில பாஷையிற் பல்லாயிரக் கணக்கான புத்தகங்கள் மலிந்து பொலிந்து கிடக்கவும் பின்னும் புதுப் புதுப் புத்தகங்கள் முடிவின்றி யோய்வின்றி எழுதி அச்சிட்டு வெளியிடப்படுகின்றன. ஆங்கில பாஷையின் அளவுக்கு மேற்பட்ட அநியாயமான செல்வாக்கே நமதருமைத் தாய்ப் பாஷையாகிய தமிழை அலட்சியஞ் செய்வதற்கும் அதன் பயனுய்த் தமிழ் புதுநூல்க ளியற்றும் பெருமுயற்சியை அலட்சியஞ் செய்வதற்குங் காரணமா யிருக்கின்றது.

நாம் மேற்கூறியவாறு தமிழிற் புதுநூல்களை இயற்றி அச்சிட்டு வெளியிடாது காலந் தாழ்த்தும் வரைக்கும் தமிழ் மக்களுள் அறிவு விருத்தி குறைவுற்றிருப்பதன்றித் தமிழ்ப்பாஷைப் பிரயோகமும் குன்றியே நிற்கும். ஆதலின் நமது தேசத் தமிழபிமானிகள் தம்மாலியன்ற முயற்சி செய்து அரசினரின் சகாயத்துடன் தமிழ்ப்பாஷையிற் பலவித புது நூல்களை இயற்றி அறிவையுஞ் செந்தமிழையும் விருத்தி செய்வா ரென்று காத்திருக்கின்றோம்.

---

## ஒரு வேண்டுகோள்

(உருத்திராக்கச் சொற்றொடர்ப் பொருள்)

சைவர்களாகிய நாம் சைவ சின்னங்களில் ஒன்றாகிய உருத்திராட்சமென்பது சிவபெருமானது நேத்திரங்களிலிருந் துற்பத்தியாயதென்றும், உருத்திராக்கமெனுந் தமிழ்ச் சொற்றொடர், தமிழ் இலக்கண முறைப்படி, ருத்திராட்சமென்பதன் திரிபென்றுங் கொண்டிருந்தோம். தற்காலத்திய சரித்திர ஆராய்ச்சி முறைப்படி சரித்திர ஆராய்ச்சியிலும் கல்வியிலும் வல்லுனராகிய தமிழர் ஒருவர் உருத்திராக்கமெனுஞ் சொற்றொடரே ஆதிப் பதமென்றும், உரு=உடம்பு, திரம்=வலிமை, ஆக்கம்=செய்தல், தேகத்துக்கு வலிமையைக் கொடுக்குஞ் சக்தி, அதாவது காந்தசத்தி மின்சாரசத்தி இயற்கையிலே உடைய பொருளென்றும், ஆரியர்கள் நம் நாடு புகுந்த பின்னர் ருத்திராட்சமென விதற்குப் பெயர் கொடுத்தனரென்றும் பற்பல

விடயங்களெழுதிப் புத்தக ரூபமாக வெளிப்படுத்தி யிருக்கின்றனர். சைவ பத்திரிகாசிரியர்களும், வடமொழி, தென்மொழி வல்லுனர்களும் மற்றும் வித்துவ சிரோன்மணிகளும், உருத்திராட்சத்தின் திரிபு உருத்திராக்கமா? அல்லது உருத்திராக்கமென்பதை ருத்திராட்சமென ஆரியர்கள் ஏற்பாடு செய்து கொண்டனர்களா? இதன் பொருளென்ன? இவைகளை விளக்கிக்காட்டி இப்பத்திரிகை மூலமாகத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்ளப் படுகின்றார்கள். தெலுங்கு, கன்னடம் அல்லது மஹாராஷ்டிரம், மலையாளம், துளுவம் இப்பாஷா பண்டிதர்களும் இவ்விடயத்தை விளக்கிக் காட்டுவார்களென நம்புகிறேன்.

திரு. மா. சாம்பசிவம் பிள்ளை,
திரிசிராப்பள்ளி, 9—4—23.

---

## சிவஞான தீபம்

### இரண்டாவது அபக்குவர்கதி யியல்

முன் மொழிந்த பக்குவமில்லா அபக்குவரெவர்க்கும் அருளானந்த முண்டாகாது. எதனாலெனின்.—எல்லாம் மண் முதலிய பூதப் பொருள்களாகவே காணப்படுகின்றன: அவைகளிபிற்கைய அவைகளை யாரும் ஆக்கியளித்து ஒழித்தல் கூடுமென்று எண்ணற்கு இடனின்று: அவைகட்கு வேறாய் ஆன்மா வென்பதொன்று உண்மைப்பொருளாயுள்ளதென்றும், அதனைத் தனது ஆணைவழி நிறுத்தியாளும் ஈசுவரனுள னென்று முரைக்குஞ் சாத்திர சித்தாந்தங்கள் கம்பத்தக்கன வல்லவெனச் சாதிக்கத் துணியு நிரீசுவரவாத நாத்திகனிடத்திலேயும் தெய்வ முண்டோ? இன்றோ? என்னு மையம் முழுதுந் தொலையாது தங்கியிருத்தல்போலத் தெய்வமுண்டென்னும் ஆத்திக னிடத்திலேயு மஃதுண்டோ? இன்றோ? என்னுமையந் தொலையாது தங்கியிருத்தலினாலென்க. இவ்வைய மறுமாறு சற்குரு முகமாகச் சிவஞான சாத்திரங்களை யினிதோதி யுணர்தலென்னும் அபரஞானந் தோன்றிய பின்னர்க் குருமொழி பிடித்துத் தரிசித்தலென்னும் அனுபவ ஞானமாகிய பரஞான மெய்தினவர் யவ்வாளைந்த முடையோராவர். சாத்திரங்கள் ஒன்றோடொன்று முரணுமாலோவெனின், — சிவபரம்பொருளைத் தியானித்திருக்கும் வழி யெய்தப் பெறுமொரு ஞானமே சற்சாத்திரங்களுட் கொளக்கிடக்கு முண்மையாகலின் அது, முரணுமாறு யாண்டையதென்க. வேறு சில விடய வேறுபாடுகள், கற்பந்தோறும்



படைப்பு வேறுபா டுடைமையி னெய்தியனவா மாகலின் வேறுபடக் கூறலும் பொருந்துமென்று சமாதானஞ் சாற்று புத்தகங்களுமுள. அங்ஙனமாயின், சீதாபகரணமும் இராம இராவண யுத்தமும் பன்முறை யேற்பட்டு அது சிறிது சிறிது பேதமாக வுளதென்றே கோடல் வேண்டுமென்பதும் இப்படி யொவ்வொரு வரலாற்றிற்குங்கோடன் முறையாமென்பது மேற்படலானும், அனைத்து மொற்றுமையாகாமே சிறிது சிறிதே பேதமெய்துத லெவ்வாற்றா னென்னும் இருங்கடா வெழவுளதானும், அப்பேத காரணமுஞ் செய்கையும் அனுதி தொடக்கமாக ஈசுவரனு லேற்படுகின்றன வென்பது கொளக்கிடத்தலானும், இவ்வகை யியல்புடை யீசுவரன் சீவர்களகத்தே இது பாவம் இது புண்ணிய மென்பன கண்டு நீதி செலுத்த வுரியவனுகா னென்பது சித்திக்கின்றமையானும் அச் சமாதானஞ் சால்புடைத்தன்றென விதிவாத மறுப்பினர் மறுப்பரால். அன்றியும் கற்ப காலங்களிற் புத்தகங்களழியாதிருக்கு மென்றற்கும், இன்ன கற்பத்தில் இன்ன புத்தகந் தோன்றிற் றென்னும் விவரத்தை அவ்வப்புத்தகங்களுட் காணப் பெறுதார் மேலே கூறியவாறு கற்பபேத மெடுத்துக் கழறற்கும் ஏற்புடை யேது வின்றென்னு மறுப்பு எதனு லொழியுமால். கற்பந்தோறு மேற்பட்ட தேவார திருவாசகாதிகளுமுளவோ? அவற்றை யின்ஞான்றெடுத்துக் காட்டுநருமுளரோ? என்னுங் கடாக்கட்கு இறுக்கும் விடை எவையாமால்! பிரபவமுதலிய வருடங்களுஞ் சித்திரை முதலிய மாதங்களும் ஞாயிறுமுதலிய கிழமைகளுஞ் சென்று சென்று வருமாறு இந்திரர்களும் மனுக்களும் வருவரென்றல் காலவளவையையும் அதிகாரி மாறி வருதலையுங் குறிப்பதாதல் வேண்டும். பிரமன் முதலினோர் தோற்றமு மொடுக்கமுங் காலவளவையுட் படுவன வாயினும் அன்னோர் புரி சிருட்டிமுதலியன, சீவர்கண்மாட் டெஞ்சியுள்ள இச்சைவழியே நிகழ்வனவாகலின் ஈசுவர காரியம் விதிவாதத்துட் படுமென்றற்கும் இடனின்றன்றே. பின்முறை பிரதி செய்யப்பட்ட வகையானும், ஒருவர்க்கொருவர் போதித்த வகையானும், அப்போதிப்பு—ஒருவன் பெயரே வூரே வேறொருவனுக்கு மெய்தலா மென்பதை யுணரா தெழுந்த வாற்றானும் பிரதி வேறுபா டேற்பட்டிருத்தல் கூடுமென்னு நிச்சயம் ஈண்டேற்புடைச் சமாதானமாமென எண்ணும் விவேகிகள், நியாயவழியே அவ்வேறுபாடும் நீக்கற்பாலதாமென் றுரையார் கொலோ! மேலே கூறிய நிரீசுரவாத அவிவேகங் கணித்து இங்கே கண்டித்துக்காட்டுவ தென்னெனில்,—

## மூன்றாவது நிரீசுர்வாத கண்டனவியல்

அணுதியான கடவுளொருவ னுண்டென்னும் ஆத்திகரினும்
விசேட அறிவு படைத்த சுய ஞானிகள் யாங்களென்று பிதற்றிப்
பூதங்களையே யனுதி யென்னும் பூதவாதியோர், தாங் கற்ற (Ceemi-
stry) கெமிஸ்ட்ரியின் படிக்கேனும் வேறு (Science) சயன்சின்படிக்
கேனும், தஞ் சுயஞானத்தின் படிக்கேனுந் தக்க ஆலோசனை புரிந்து
மண்ணுதிபைந்தையும் அம்மியில்வைத் தரைத்து உருட்டியோ
வேறெவ்விதமாகவோ இஞ்ஞான்று முளைத்து வளரத்தக்க யாதானு
மொரு விதையாஞ் சிருட்டியைச் செய்யமாட்டுவாராயின், அஞ்ஞான்
றும் இன்னணம் எவனோ ஒரு மனிதனிருந்து செய்த காரியமே இவ்
வுலகாயுளது ; அவன் ஏனையோர் போல மரித்துவிட்டானென்று நிச்ச
யிக்கலாம். அஃதொழிந்து பூதப் பிரவிருத்தியால் யாவு முண்டாயின
வென்று பிதற்றுவது குயவன் வனையாக் குடமென்றதிர்ப்ப தொக்கும்.

அவர் நினைப்பின்படி பூதங்களே யாவையு முண்டுபண்ணுமாயின்,
எல்லா யோசனையுமுடைய அறிவு அவற்றிற் கிருக்கவேண்டு மன்றோ?
ஆயின், அவ்வறிவைக் கடவுளாகவேனு மவரொப்புக் கொள்ளா
தொழிதன் மட்டறு மடமையாமே!

மேல், அந்தப் பூதங்க ளொன்றாய்ச் சேர்வதுதா னறிவென் றவர
றையின், அவைகளைச் சேர்த்துவைத்த அறிவு யாதோ? என்னுங்
கடா வெழுவதோடு அறிவில் பொருள்களின் கூட்டத்தா லறிவு
தோன்றுமென்று பொருளியல்பறியா துரைப்பதென்? என்னும் வினவு
மெழும். மேல், ஒன்றாய்ச் சேர்வதும் (Nature - நேச்சர்) இயல்
பென்னின்,—தனித்தனி அனுதியாயுள்ள அவற்றின் கட்டோன்று
மரஞ் செடி முதலியன, பூத்தற்குங் காய்த்தற்குங் காலவளவையி னுட்
பட்டு நிற்குமா றென்னை? என்னுங் கடா வெழுதலோடு காலமே மேம்
பட்டபொரு ளென்றலுஞ் சித்திக்கும். ஈண்டுக் காலமென ஒருபொரு
ளின்றெனின்,—அப்பூத்தலுங் காய்த்தலு மில்லா தொழியும்; இராப்
பக லில்லையென்பது மெய்துமாகலிற் காலமறுப்புப் பொருந்ாதென்ப
தூஉம், அக்காலமு மறிவிலதாதலின் அஃதுந் தானே பிரபஞ்சத்தை
வரம்புவழி நடாத்துமெனற்கு மிட்டின்றென்பதூஉந் தோன்றும்.
இவையேயுமன்றி, அப்பூதங்கள் ஆகாயம், காற்று, தீ, நீர்,
மண்ணுயிருத்த லுண்மையாயின், பை, முட்டை, வியர்வை,
நிலம் என்னு நாற்றிறத் தோற்றத்தையு முண்டுபண்ணிய காரண
மென்னை? கண்டு களிக்கவா? களித்தற்குக் கண்ணுங் கருத்தும்
அவற்றின்கட் காட்டல் கூடுமோ?

(இன்னும் வரும்.) ૧

Library's copy lacks back wrapper

